31st August 1961] [Deputy Speaker]

(2) The Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 28 of 1961).

(3) The Madras Tenants and Ryots Protection (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 29 of 1961).

(4) The Holdings (Stay of Execution Proceedings) (Madras Amendment) Bill, 1961 (L.A. Bill No. 24 of 1961).

(5) The Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 30 of 1961).

## IV. PRESENTATION OF THE REPORT OF THE COMMITTEE OF PRIVILEGES

SRI V. S. MANIKKASUNDARAM : I present to the House the report of the Committee of Privileges on 'The Mail' case which was referred to it.

## V.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS APPROPRIATION (NO. 5) BILL, 1961 (L.A. BILL NO. 36 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) be taken into consideration."

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) be taken into consideration."

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் ஆட்சேபிக்கவில்லை, ஆதரிக்கத்தான் போகிறேன். இருந்தாலும் இதன்மீது சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இதற்கு முன்னால் பேசிய பேச்சை ஒட்டி வரக்கூடிய சில கருத்துக்களைத் தெரிவிக்கலாம் என்றுதான் இப்போது நிற்கிறேன். இந்த மசோதாவின்மீது எதுவுமே பேசாமல் இந்த மசோதா நிறைவேறியிருக்கவேண்டியது. இதில் முக்கியமாக வெள்ளம் சம்பந்தமாகவும், இதற்கு நிவாரணம் கொடுப்பது சம்பந்தமாகவும் நான் சில யோசனைகளை இந்த சபையில் கூறியிருக்கிறேன். அவைகள் அவ்வளவு முக்கியமல்ல என்கிற காரணத்தாலோ, அல்லது இதைவிட பல முக்கியமான பிரச்னைகள் இருந்தன என்கிற காரணத்தாலோ என்னவோ அமைச்சர் அவர்கள் இதற்குப் பதில் சொல்லவில்லை. நிவாரணம் அளிக்கக்கூடிய விஷயத்தில், குறிப்பாக, நகரப்புறத்தில் அதிலும் திருச்சி நகரத்தில் வீடு இழந்த மக்களுக்கு உதவி செய்து கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருந்தேன். அதைப் பற்றி அமைச்சர் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை என்றாலும், இதைப் பற்றி உடனடியாக கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று அமைச்சர் அவர்கள் காவேரித் தண்ணீர் பிரச்னை சம்பந்தமாக பல கருத்துக்களை சொன்னார்கள், அவர்கள் சொன்ன கருத்துக்களில் எனக்கு உடன்பாடுதான். மைசூர் ராஜ்யத்திலுள்ளவர்களும், தமிழ்நாட்டிலுள்ளவர்களும் வேறு வேறு பிரச்னைகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கற்பனை செய்வது கூடாது என்பதுதான் என் அபிப்பிராயமும். காவேரிக்கு மேட்டூரில் நாம் அணை கட்டிய